கசு. திருக்காளத்தி. சுவாமியார் - காளத்திநாதேசுரர், தேவியார் - ஞானப் பூங்கோதை யம்மையார். * பாம்பு, யானை, சிலந்தி, கண்ணப்பநாயனுர் நக்கீரர் சிவகோசரியார் முதலியோர் முத்தி வுற்ற தலம். திருஞான பதிகம்-உ. திருநாவு பதிகம்-க. சுந்தர பதிகம் - க. ஆக-ச. அதற்குத் தென்கிழக்கே ருo-கடிகை தூரத்தில்,

உo. திருவொற்றியூர். சுவாமியார்-மாணிக்கத் தியாகேசர், தேவியார்-வடிவுடை யம்மையார். ஆதிபுரீசுரர், திரிபுரசுந்தரியம்மையெனவும் வழங்குகின்றது. தீர்த்தம் - பிரம தீர்த்தம். விருக்ஷம் - மகிழ். சிவபெருமான், சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சங்கிலி நாச்சியாரைத் திருமணஞ் செய்வித்த தலம். கலிநீதி நாயனுர் வழிபாடாற்றி முத்தியுற்ற தலம். பிரமன் பூசித்த தலம். அத்தலத்தின்கண் பட்டணத்துப் பிள்ளையாரது திவ்விய சமாதியு மிருக்கின்றது. திருஞான பதிகம்-க. திருநாவு பதிகம் - ரு. சுந்தர பதிகம் - உ, ஆக - அ. அதற்குத் தென் மேற்கே எ-கடிகை தூரத்தில்,

உக. திருவலிதாயம் எ-து பாடி. சுவாமியார் - வலிதாயநாதர், தேவியார் - தாயம்மையார், தீர்த்தம் - வலிதாயம். திருஞான பதிகம் - க. அதற்கு வடமேற்கே ரு-கடிகை தூரத்தில்,

உஉ. திருவடமுல்லைவாயில். சுவாமியார் - மாசிலாமணீசுரர், தேவியார் - கொடியிடை நாயகியார், தீர்த்தங்கள் - பாலாறு, சுப்பிரமணிய தீர்த்தம். சிவபெருமானுர் ஆதொண்டைச் சக்ரவர்த்தி வெட்டுத் தாங்கி வெளிப்பட்ட தலம். சுப்பிரமணியர் பூசித்த தலம். சுந்தர பதிகம்-க. அதற்குத் தென்மேற்கே ௬-கடிகை தூரத்தில்,

உ௩. திருவேற்காடு. சுவாமியார் - வேற்காட்டீசுரர், தேவியார் வேற்கண்ணி யம்மையார், தீர்த்தம் - வேற்கண்ணி. திருஞான பதிகம்-க. அதற்குத் தென்கிழக்கே கo-கடிகை தூரத்தில்,

* தீர்த்தம் - பொன்முகலி.

௨௪. திருமயிலாப்பூர். சுவாமியார் - கபாலீசுரர், தேவியார் - கற்பகவல்லியார், தீர்த்தங்கள் - கபாலி, மணிகாணிகை. விருக்ஷம - புன்னை. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் பூம்பாவை என்னும் பெண்ணினுடைய என்பைப் பெண்ணாகும்படி பாடியருளிய தலம். பார்வதியார் - மயிலாய்ப் பூசித்த தலம். திருஞான பதிகம் - க. அதற்குத் தென்கிழக்கே ௩-கடிகை தூரத்தில்,

௨௫. திருவான்மியூர். சுவாமியார் - மருந்தீசுரர், தேவியார் - சொக்கநாயகியார். சிவபெருமான் வான்மீக ரிஷிக்கு நடன தரிசனங் காட்டிய தலம். திருஞான பதிகம்-உ. திருநாவு பதிகம் - க. ஆக - ௩. அதற்குத் தென்மேற்கே க௮ கடிகை தூரத்தில்,

௨௬. திருக்கச்சூராலக்கோயில். சுவாமியார் - விருந்திட்டநாதர், தேவியார் - அஞ்சனாக்ஷியார், தீர்த்தம் - விருந்து தீர்த்தம். சிவபெருமான் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு அமுது கொடுத்த தலம். சுந்தர பதிகம்-க. அதற்குத் தென்கிழக்கே ரு-கடிகை தூரத்தில்,

௨௭. திருவிடைச்சுரம். சுவாமியார் - இடைச்சுரநாதர், தேவியார் - மடக்கொடி நாயகியார். ஞானபுரீசுரர், கோவர்த்தனாம்பிகை என்றும் வழங்குகின்றது. தீர்த்தம் - மதுர தீர்த்தம். நான்கு திக்கும் பருப்பதங்கள். நந்திமலை - கிருத்திகை தீபம். திருஞான பதிகம்-க. அதற்குத் தெற்கே ரு-கடிகை தூரத்தில்,

௨௮. திருக்கழுக்குன்றம். சுவாமியார் - வேதகிரீசுரர், தேவியார் - பெண்ணினல்லா ளம்மையார், தீர்த்தங்கள் - பக்ஷி தீர்த்தங்கள், நந்தீசுர தீர்த்தம் முதலியன கழுகுகள் பூசிக்குந் தலம். திருஞான பதிகம்-க. திருநாவு பதிகம்-க. சுந்தர பதிகம்-க. ஆக-௩. அதற்குத் தென்மேற்கே ௨௦-கடிகை தூரத்தில்,

௨௯. திரு அச்சிறுபாக்கம். சுவாமியார் - பாக்கபுரேசுரர், ஆக்ஷியீசுரர், தேவியார் - சுந்தரமின்னம்மையார். மரகதவல்லி யம்மையார்,

திரிபுரதகனத்துக்குச் சிவபெருமானேறிய ரதம் அச்சிற்று. விநாயகரதருளாற் கூடிய தலம். தீர்த்தம் - சங்கு தீர்த்தம். விருக்ஷம்-கொன்றை. திருஞான பதிகம் - க. அதற்குத் தென்மேற்கே உ௫ - கடிகை தூரத்தில்,

௩௦. திருவக்கரை. சுவாமியார் - சந்திரசேகரேசுரர், தேவியார் - வடிவம்பிகையார். அமிர்தாம்பிகையாரென்றும் வழங்குகின்றது. தீர்த்தங்கள் - சந்திர தீர்த்தம், பிரம தீர்த்தம். வக்கிராசுரன் பூசித்த தலம். திருஞான பதிகம் - க. அதற்குக் கிழக்கே சு-கடிகை தூரத்தில்,

௩க. திரு அரசிலி எ - து ஒழுந்தியாப்பட்டி. சுவாமியார் - அரசிலிநாதர், தேவியார் - பெரிய நாயகியார், தீர்த்தம் - அரசிலி. திருஞான பதிகம்-க. அதற்குத் தென்மேற்கே உ-கடிகை தூரத்தில்,

௩உ. திருவிரும்பைமாகாளம். சுவாமியார்-மாகாளேசுரர், தேவியார் - குயின்மொழி நாயகியார். மதுசுந்தர நாயகியாரெனவும் வழங்குகின்றது. திருஞான பதிகம்-க.

ஆக தொண்டைநாட்டிலுள்ள ஸ்தலங்கள் - ௩உ.

திருச்சிற்றம்பலம்.

---

## துளுவநாட்டிலுள்ள ஸ்தலம்.

க. திருக்கோகர்ணம். சுவாமியார் - மகாபலநாதர். தேவியார் கோகர்ண நாயகியார், தீர்த்தம் - கோகர்ணம். இராவணன் கைலத்திலிருந்து சிவபிரானனுக்கிரகத்தாற் கொண்டுவந்த சிவலிங்கப் பெருமானை விநாயகக் கடவுள் உபாயத்தால் வாங்கிப் பிரதிட்டை செய்த தலம். திருஞான பதிகம்-க. திருநாவு பதிகம்-க. ஆக-உ.

திருச்சிற்றம்பலம்.

---

## வடநாட்டிலுள்ள ஸ்தலங்கள்.

க. திருப்பருப்பதம். சுவாமியார் - பருப்பத நாதர், தேவியார் - பருப்பத நாயகியார், தீர்த்தம் - பாலாழி. மல்லிகார்ச்சுனம். ஸ்ரீசயிலம் என்பதும் இது. நந்திகேசுரர் பூசித்த மலை. திருஞான பதிகம்-க. திருநாவு பதிகம்-க. சுந்தர பதிகம்-க. ஆக-ங.

உ. திருவிந்திர நீலபருப்பதம். சுவாமியார்-நீலாசலநாயகேசுரர், தேவியார் - நீலாம்பிகையார், தீர்த்தம் - நீலாம்பிகை. திருஞான பதிகம்-க.

ங. திருவனேகதங்காவதம். சுவாமியார் - அருண்மன்னநாயகர், தேவியார் - மனோன்மணி யம்மையார், தீர்த்தம் - ஞான தீர்த்தம். திருஞான பதிகம்-க.

ச. திருக்கேதாரம். சுவாமியார் - கேதாரேசுரர், தேவியார் - கேதார கௌரியம்மையார், தீர்த்தம் - மந்தாகினி: ஆறுமாதந் தேவர்களும், ஆறுமாதம் மனுடரும் பூசித்துவருந் தலம். திருஞான பதிகம் - க. சுந்தர பதிகம்-க. ஆக-உ.

ரு. திருநொடித்தான்மலை எ-து ஸ்ரீ கைலாசமலை. சுவாமியார்- பரமசிவம், தேவியார் - பார்வதி யம்மையார், தீர்த்தம் - சரவணப் பொய்கை. திருஞான பதிகம்-உ. திருநாவு பதிகம்-ச. சுந்தர பதிகம்- க. ஆக-எ.

ஆக வடநாட்டிலுள்ள ஸ்தலங்கள் - ரு.

திருச்சிற்றம்பலம்.

உ

திருச்சிற்றம்பலம்.

# தேவாரம்.

கற்றுக் கொள்வன வாயுள நாவுள
விட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுள னுமுளோ
மெற்றுக் கோநம னார்முனி வுண்பதே.

---

உ

திருச்சிற்றம்பலம்.

# அட்டவீரட்டம்.

---

கட்டளைக்கலித்துறை.

பூமன் சிரங்கண்டி யந்தகன் கோவல் புரமதிகை
மாமன் பறியல் சலந்தரன் விற்குடி மாவழுவூர்
காமன் குறுக்கை யமன்கட வூரிந்தக் காசினியிற்
றேமன்னு கொன்றையுந் திங்களுஞ் சூடிதன் சேவகமே.

க. திருக்கண்டியூர் - பிரமனது சிரங்கொய்த தலம்.
உ. திருக்கோவலூர் - அந்தகாசுரனைக் கொன்ற தலம்.
௩. திருவதிகை - திரிபுரத்தை யெரித்த தலம்.
௪. திருப்பறியலூர் - தக்கன் சிரசைத் தடிந்த தலம்.
௫. திருவிற்குடி - சலந்தரனை வதைத்த தலம்.
௬. திருவழுவூர் - யானையை யுரித்த தலம்.
௭. திருக்குறுக்கை - மன்மதனை யெரித்த தலம்.
௮. திருக்கடவூர் - இயமனை யுதைத்த தலம்.

---

உ

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தமூர்த்தி

# திருப்பாசுரம்.



வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீரவே.

திருச்சிற்றம்பலம்.

---

உ

கணபதி துணை.

# சைவசமயம், சைவசமயி அநாசாரம், திருக்கோயிற் குற்றங்கள்



இவை

யாழ்ப்பாணத்து

நல்லூர்

ஆறுமுகநாவலரவர்களால்

எழுதப்பட்டன.

உ

கணபதிதுணை.

# சைவசமயம்.

பிறப்பும் இறப்பும் உடையவர்கள் பசுக்கள்; பசுக்கள் எண்ணில்லாதவர்கள்; பசுக்களாவார், தேவர்கள் முதலாகக் கிருமிகள் ஈறாக உள்ளசீவர்கள்.

பிறப்பும் இறப்பும் இல்லாதவர் பதி; பதி ஒருவரே; அந்தப் பதி சிவபெருமான். சிவபெருமானுக்குப் பசுக்களெல்லாம் என்றும் அடிமைகள்; சிவபெருமான் அந்தப் பசுக்கள்தோறும் நிறைந்து நின்று அவர்களை எல்லாம் ஆளுந்தலைவர். ஆதலாற் சிவபெருமான் ஒருவரே பசுபதி. [பசுக்களுக்குப் பதி. பசுபதி-பசு-ஆன்மா. பதி-தலைவன்.]

இந்த உண்மையை விசுவசித்துச் சிவபெருமானை வழிபடுகிற மார்க்கஞ் சைவசமயம். பலரைப் பரம் என்று கொண்டு வணங்குகிற சமயம் சைவ சமயம் ஆகாது, சிவபெருமானிலும் உயர்ந்தவர் உண்டு என்றுவது, சிவபெருமானுக்குச் சமத்துவம் உடையவர் உண்டு என்றுவது, கொள்வது சிவத்துரோகம்.

சிவபெருமானின் வேறுகாத திருவருளே சிவசத்தி அந்தச் சிவசத்தியே பார்வதி தேவியாரென்று சொல்லப்படும். சிவபெருமான் ஆன்மாக்களுக்கு அருள்செய்யும்பொருட்டுக் கொண்டருளிய மூர்த்தங்கள்:—

விநாயகக்கடவுள், சுப்பிரமணியக்கடவுள், வைரவக்கடவுள், வீரபத்திரக்கடவுள். இவர்களுக்குச்செய்யும் வணக்கம், சிவபெருமான் ஒருவரைக் குறித்த வணக்கமேயாம். சத்தி-வல்லமை.

முப்பத்துமுக்கோடி தேவர்களைப் பரம் என்று கொண்டு வணங்குகிற மார்க்கஞ் சைவசமயம் என்று மூடர்கள் பலர் சொல்லுகிறார்கள். மனிதர்களைப்போலவே பிறந்தும் இறந்தும் உழலுகிற தேவர்களைப் பரம் என்று கொள்வது சைவசமயத்துக்கு முற்றும் விரோதம்.

சைவசமயிகளை அஞ்ஞானிகள் (Heathens) என்று கிறிஸ்தவர்கள் வழங்குகிறார்கள். அஞ்ஞானி என்கிற சொல்லுக்குப் பொருள் மெய்க்கடவுளை அறிகிற அறிவு இல்லாதவன். கிறிஸ்தவர்கள் தங்கள் கருத்தின்படி தாங்கள் சைவசமயிகளை அஞ்ஞானிகள்என்று வழங்கலாம் என்றால், சைவசமயிகளுந் தங்கள் கருத்தின்படி தாங்கள் கிறிஸ்தவர்களை அஞ்ஞானிகளென்று வழங்கலாமே!

சைவசமயிகள் என்று பெயர் இட்டுக்கொண்டு, அநேக மூடர்கள், உயிர்ப்பலி ஏற்கிற துட்ட தேவதைகளையும், காடன், மாடன், சுடலைமாடன், காட்டேறி, மதுரைவீரன், கறுப்பன், பதினெட்டாம்படிக் கறுப்பன், சங்கிலிக் கறுப்பன், பெரியதம்பிரான், முனி, கண்ணகி, பேய்ச்சி முதலானவர்களையும், வணங்குகிறார்கள். இந்தியாவில் அநேக மூடர்கள் மகமதியர்களுடைய பள்ளிவாயிலைச் சேவிக்கிறார்கள், இலங்

கையில் அனேக மூடர்கள் ரோமான் கத்தோலிக்கருடைய மரியை கோயிலுக்குக் காணிக்கை செலுத்துகிறார்கள். இவர்கள் எல்லாருஞ் சிவத்துரோகிகள்; இவர்களே அஞ்ஞானிகள்.

சைவசமயத்தைத் தமிழ்ச்சமயம் என்றும், சைவசமயக் கோயிலைத் தமிழ்க்கோயில் என்றும், அறிவில்லாத சனங்கள் வழங்குகிறார்கள். தமிழ் என்பது ஒரு சமயத்தின் பெயரன்று, ஒருபாஷையின் பெயர்.

பெறுதற்கு அரிய மனிதப் பிறவியைப் பெற்றும், மிக மேலாகிய சைவசமய மரபிலே பிறந்தும், சைவசமயம் இப்படிப்பட்டது, அந்தச் சமயக்கடவுள் இப்படிப்பட்டவர், அவரை வழிபடுகிற முறைமை இப்படிப்பட்டது என்று ஆராய்ந்து அறிந்துகொண்டு சைவசமயத்தை அனுட்டியாது, நேர்ந்த நேர்ந்தபடி நடப்பது, ஐயையோ! நரகத்துன்பத்துக்குக் காரணம்.

சைவசமயிகள் சைவசமயத்தை அறியாது கெடுவதற்குக் காரணம், சைவசமயத்தைச் சைவசமயகுருமார்கள் பிரசங்கஞ் செய்யாது விடுதலே. யாதாயினும் ஒரு சமயத்தை அறிந்து பிரசங்கஞ் செய்யாதவர்கள், அந்தச் சமயத்துக்குத் தாங்கள் குருமார்கள் என்று சொல்லிக்கொண்டு திரிவதும் அந்தக் குருத்துவத்துக்கு உரிய பொருளையும் மரியாதையையும் தாங்கள் பெற விரும்புவதும் என்னே! வெட்கம்! வெட்கம்!!

சிவமயம்.

# சைவசமயி.

விபூதி தரிப்பது மாத்திரமே சைவசமயிக்கு இல்க்கணம் என்று அநேகர் எண்ணுகிறார்கள்.

விபூதி தரிப்பது, மற்சமாமிசம் புசியாது விடுவது இந்த இரண்டு மாத்திரமே சைவசமயிக்கு இலக்கணம் என்று வேறு அநேகர் எண்ணுகிறார்கள்.

விபூதி தரிப்பது, மற்ச மாமிசம் புசியாது விடுவது, மற்ச மாமிசம் புசிக்கிறவர் காணாமற் போசனஞ்செய்வது இந்த மூன்றுமாத்திரமே சைவசமயிக்கு இலக்கணம் என்று வேறு அநேகர் எண்ணுகிறார்கள்.

சைவசமயிக்கு உரிய முக்கிய லக்கணங்களாவன:—

க. கொலை, களவு, கள்ளுண்ணல், மற்சமாமிசம் புசித்தல், வியபிசாரம், பொய் முதலாகிய பாவங்களை மரணபரியந்தம் விலக்கிநடப்பது.

உ. உயிர்களுக்கு இரங்குதல், மெய் பேசுதல், வறியவர்களுக்கு ஒருபிடி அன்னமாவது கொடுத்தல், செய்ந்நன்றி அறிதல் இந்தத் தருமங்களை மரணபரியந்தம் பாதுகாத்து நடப்பது.

ந. பிதா, மாதா, பாட்டன், பாட்டி, தமையன், மாமன், உபாத்தியாயர், குரு, இராசா முதலிய பெரியோர்களை மரணபரியந்தம் உபசரிப்பது.

ச. சிவதீக்ஷை பெற்றுக்கொள்வது.

ரு. விபூதி ருத்திராக்ஷந் தரிப்பது.

சா. சந்தியாவந்தனம், சிவத்தியானம், பஞ்சாக்ஷர செபம், சிவஸ்தோத்திரம், இவைகளை மரணபரியந்தம், நித்தமும், ஒருபத்து நிமிஷநேரத்திலாவது, மனத்தை ஒருக்கி, விதிப்படி அன்புடன்செய்து முடிப்பது.

எ. நித்தமுமாவது, புண்ணிய காலங்களிலாவது சிவலிங்கப்பெருமானை அன்புடன் விதிப்படி வலஞ்செய்து வணங்கித் துதிப்பது.

அ. சைவவினாவிடை, சிதம்பர மான்மிய வசனம், பெரியபுராண வசனம் முதலாகிய புத்தகங்களை வாசித்தாவது கேட்டாவது அறிவது.

கூ. சிவபெருமானுடைய மகிமையும் புண்ணிய பாவங்களையும் சிவபெருமானை வழிபடு முறைமையையும் அறிவிக்கிற சைவப்பிரசங்கங்களைக் கேட்டுச் சிந்திப்பது.

க௦. சிவநிந்தை, சிவசாத்திர நிந்தை, குரு நிந்தை, சிவனடியார் நிந்தை இவைகளைக் கேளாது நீங்கிவிடுவது.

கக. திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், திருநாவுக்கரசுநாயனார், சுந்தரமூர்த்திநாயனார், மாணிக்கவாசக சுவாமிகள் என்னுஞ் சைவசமய குரவர் நால்வருடைய திருநக்ஷத்திரங்களிலே, அவரவருடைய சரித்திரத்தைக் கேட்டுச் சிவனடியார் ஒருவருக்காவது அன்னங்கொடுத்து, விரதத்துடன் இருப்பது.

கஉ. செய்யத்தகாத பாவத்தைச் செய்தாலும், செய்யத்தக்க புண்ணியத்தைச் செய்யாதுவிட்டாலும், மனம் பதைபதைத்து அஞ்சி நடுநடுங்கி, குருவை அடுத்து, அவர் சிவாகமப் பிரகாரம் விதித்த பிராயச்சித்தத்தை விசுவாசத்துடன், செய்து கொள்வது.

சிவமயம்.

# அநாசாரம்.



௧. மற்சம் மாமிசம் புசித்தல்.

௨. கள்ளுச் சாராயங் குடித்தல்.

௩. மற்சம் மாமிசம் புசிப்பவர், கள்ளுச் சாராயங் குடிப்பவர் தாழ்ந்த சாதியார், அன்னிய சமயிகள் என்கிற இவர்களிடத்தாவது, இவர்களுடன் இருந்தாவது, இவர்கள் காணவாவது போசனம் பண்ணுதல்.

௪. சனனாசௌசம் மரணாசௌசம் உடையவரிடத்தே போசனம் பண்ணுதல்.

௫. போசனஞ்செய்த உடனே எச்சில் தெளியாது விடுதல்.

௬. எந்தப் பாத்திரத்தையாவது எச்சிலாக்குதல்.

௭. பலகாரம் பழம் முதலியவைகளை எச்சில்பண்ணிப் புசித்தல்.

௮. புகையிலைச் சுருட்டுப் பிடித்தல்.

௯. வெற்றிலைப்பாக்கு வாயிலிருக்கச் சயனித்தல்.

௧௦. காலையிலே தந்தசுத்தி பண்ணுமுன்னே வெற்றிலைபாக்குப் போடுதல்.

௧௧. வாயோடு கையையுங் கையோடு பாத்திரத்தையும் அணைத்து, எச்சில்பண்ணித் தண்ணீர் குடித்தல்.

௧௨. வீட்டு முற்றத்திலும், கிணற்றங்கரையிலும் குளக்கரையிலும், ஆற்றங்கரையிலும், பூந்தோட்டத்திலும், திருவீதியிலும், எச்சில்உமிழ்தல், மலசலங் கழித்தல்,

கங. ஸ்நானத்துக்குஞ் சமையலுக்கும் உபயோகப்படுகிற சலத்திலே சௌசம் பண்ணுதல்.

கச. கிணற்றங்கரையிலே சௌசம் பண்ணுதல்.

கரு. சௌசத்தின்பொருட்டுப் பாத்திரத்திலே சலம் மொண்டுவைத்துக்கொள்ளாது மலசலங் கழித்தல்.

கசு. சௌசஞ்செய்த உடனும், தந்தசுத்திசெய்த உடனும், போசனஞ்செய்த உடனும், வாய்கொப்பளித்துக் கால் கழுவாது விடுதல்.

கஎ. க்ஷௌரம் பண்ணுவித்துக்கொண்டாலும், துக்கவீட்டுக்குப் போனாலும், உடுத்த வஸ்திரத்துடனே முழுகாது விடுதல்.

கஅ. முகமாத்திரம் க்ஷௌரம் பண்ணுவித்துக்கொள்ளுதல்.

கசு. மத்தியானத்துக்குப் பின் க்ஷௌரம் பண்ணுவித்தல்.

உ0. தைச் சங்கிராந்தியிலும், ஆசௌச முடிவிலும், பழைய மட்பாண்டங்களைத் தள்ளாது விடுதல்.

உக. மட்பாண்டங்களை எல்லாருங் காணும்படி வெளியிலே

உஉ. பாண்டங்களை நாய், காகம் முதலியவைகள் தீண்டவிடுதல்.

உங. ஓரத்திலே துப்பாது வழியிலே துப்புதல்.

உச. கஞ்சா, அபின் உண்டல்.

இந்த அநாசாரங்களை எல்லாரும் விலக்கித் திருத்தம் உறநடக்கக் கடவர்கள்.

# திருக்கோயிலிலுந் திருவீதியிலுஞ் செய்யத்தகாத

# குற்றங்கள்.



க. ஸ்நானஞ் செய்யாது போதல்.
௨. தோய்த் துலராத வேட்டி தரித்துக்கொண்டு போதல்.
௩. கால் கழுவாது போதல்.
௪. ஆசௌசத்துடனே போதல்.
௫. தலையில் வஸ்திரந் தரித்துக் கொள்ளுதல்.
௬. சட்டையிட்டுக் கொள்ளுதல்.
௭. போர்த்துக் கொள்ளுதல்.
௮. மேல் வேட்டி போட்டுக்கொள்ளுதல்.
௯. பாதரக்ஷை யிட்டுக்கொள்ளுதல்.
க௦. வாகன மேறிக்கொள்ளுதல்.
கக. குடை பிடித்துக்கொள்ளுதல்.
க௨. வெற்றிலை பாக்கு உண்டல்.
க௩. துப்புதல்.
க௪. மலசலங் கழித்தல்.
க௫. மூக்குநீர் சிந்துதல்.
க௬. மயிர் கோதி முடித்தல்.
க௭. சூதாடுதல்.
க௮. சிரித்தல்.
க௯. சண்டை யிடுதல்.
௨௦. வீண் வார்த்தை பேசுதல்.

உக. காமப்பற்று வைத்தல்.

உஉ. காலை நீட்டிக்கொண்டிருத்தல்.

உங. சயனித்தல்.

உச. ஆசனத்திருத்தல்.

உரு. சுவாமிக்கும் பலிபீடத்துக்குங் குறுக்கே போதல்.

உசு. சுவாமிக்கும் பலிபீடத்துக்கும் இடையிலே நமஸ்காரம் பண்ணுதல்.

உஎ. சுவாமிக்குக் காலை நீட்டி நமஸ்காரம் பண்ணுதல்.

உஅ. சுவாமிக்குக் காலை நீட்டி அங்கப் பிரதக்ஷிணம் பண்ணுதல்.

உகூ. நிருமாலியத்தைக் கடத்தல்.

ஙO. நிருமாலியத்தை மிதித்தல்.

ஙக. தூபி, துசத்தம்பம், பலிபீடம், விக்கிரகம் என்னும் இவைகளின் நிழலை மிதித்தல்.

ஙஉ. விக்கிரகத்தைத் தொடுதல்.

இந்தக் குற்றங்களைச் செய்தவர்கள் நரகத்திலே தண்டிக்கப்படுவார்கள் என்று ஆகமங்களும், புராணங்களுஞ் சொல்லுகின்றன. குளிக்கப் போய்ச் சேறு பூசிக்கொள்வது போலச் சுவாமி தரிசனமாகிய புண்ணியஞ் செய்யப்போய்ப் பாவத்தைத் தேடிக்கொள்வது புத்தியன்று. எல்லாரும், இந்தக் குற்றங்களை விட்டு விதிப்படி சுவாமி தரிசனஞ் செய்து, திருவருளைப் பெற்று உய்யக்கடவர்கள்.

இந்தியாவிலே, உத்தியோகஸ்தர்கள் அநேகர் சுவாமி சந்நிதானத்திலே விதிக்கு விரோதமாகச் சட்டை யிட்டுக்

கொண்டும், போர்த்துக்கொண்டும், மேல்வேட்டி போட்டுக் கொண்டும், தலையில் வஸ்திரந் தரித்துக்கொண்டும், பாதரக்ஷை யிட்டுக்கொண்டும், குடை பிடித்துக்கொண்டும் போகிறார்கள். அவர்கள் தங்கள் சமயத்தில் விசுவாசம் உடையவர்களானால் இப்படிச்செய்வார்களா! கிறிஸ்தவர்களுள்ளே கவர்னர் முதலிய பெரிய உத்தியோகஸ்தர்களுந் தங்கள் கோயில்களுக்குத் தங்கள் சமயக் கிரமப்படியே போவதை அவர்கள் காணவில்லையா! தங்களிற் றாழ்ந்த மனுஷர்கள் தங்களெதிரே பாதரக்ஷை இட்டுக்கொண்டாயினும் குடை பிடித்துக்கொண்டாயினும் நின்றால், அவர்களைக் கோபிக்கிறார்களே! இது குற்றம் என்று கொண்டவர்கள், இந்தக் குற்றத்தைத் தாங்கள் சுவாமி சந்நிதானத்திலே செய்யத் துணிவது என்ன செருக்கு!!!

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவானுபூதி வெண்பா,

## சற்குருவெண்பா.

## அடிமைத்திறம்.

---

திருக்கைலாயபரம்பரை-காஞ்சிபுரவாதீனத்து

அடிமை

சித்தாந்தசரபம்-அஷ்டாவதானம்

சிவஸ்ரீ - கலியாணசுந்தரயதீந்திரசுவாமிகள்

அருளிச்செய்த,

இவர் மாணவரும்

சென்னைப் பச்சையப்பன் கலாசாலை உபந்நியாசகரும்

ஆகிய

மோ - கந்தசாமி முதலியார், B. A.

அவர்களால்

சென்னை, "பென்ரோஸ் அச்சுக்கூடத்தில்"

பதிப்பிக்கப்பட்டன.

1918.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவாநுபூதி வெண்பா.

## சற்குரு வெண்பா.

### அடிமைத்திறம்.

திருக்கைலாயபரம்பரை-காஞ்சிபுராதீனத்து

அடிமை

சித்தாந்தசரபம்-அஷ்டாவதானம்

சிவஸ்ரீ - கலியாணசுந்தரயதீந்திரசுவாமிகள்

அருளிச்செய்ய,

இவர்மாணவரும்

சென்னைப் பச்சையப்பன் கலாசாலை உபந்நியாசகரும்

ஆகிய

மோ - கந்தசாமி முதலியார் B. A.

அவர்களால்

சென்னை, "பென்ரோஸ் அச்சுக்கூடத்தில்"

பதிப்பிக்கப்பட்டன.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவானுபூதிவெண்பா.

விநாயகர்.

அத்துவிதத் துண்மை யருந்துதிக்கை யாற்குறிக்கும்
அத்திமுக வெண்ணு ளமர்.

சற்குரு.

என்னைமுன் னேநிறுத்தி யேறிட் டெனைநோக்கி
முன்னை வினையின் முடிச்சவிழ்த்துப்—பின்னைப்
பழையவே டத்தைப் பறித்தென்னை யாண்டான்
தழையருள்ஞா னப்பிரகா சன்.

## நூல்.

உள்ளங்கை நெல்லியென வுள்ளபடி யேநமக்குத்
தெள்ளத் தெளிவிக்குஞ் சித்தாந்தம்— நள்ளிருணோர்
ஆணவத்தோ டத்துவித மானதுபோ லொண்ஞானத்
தாணுவினோ டத்துவிதச் சார்பு. (௧)

ஆயிழையின் பாற்கலந்த கானந்தந் துய்த்தபோ
தாயவுட லொன்றிரண்டென் றாய்வரோ—தூயசிவத்
தோடுசுகா தீதத்தி லுற்றபோ தொன்றிரண்டென்
றோதற்கு வாய்திறப்பா ரார். (௨)

## சிவானுபூதி வெண்பா.

இம்மையுறு மத்துவித மிஃதென்னச் சூழாமல்
அம்மையுறு மத்துவித மாராய்த—லம்மம்ம
கோலளவை முன்னங் குறியாம லோர்கலையின்
பாலளவை நிச்சயித்த பாங்கு. (௩)

உள்ளும் புறமு முறுமாகா யந்தன்னைத்
தெள்ளு மறிவிற் றெறியாமற்—கள்ளமிலா
விண்ணெனங் கிருப்பதெனின் மேனோக்கு வாபோல
எண்ணுவா ரீசற் கிடம். (௪)

உள்ளே யிருந்த வொருசிவமே மேலோங்கி
மெள்ள வெனையே விழுங்கிடலுந்—துள்ளுமலந்
தாரில் மறைந்த தணலெழும்ப வம்மரத்தின்
ஈரம்போ லாயின தே. (௫)

உற்ற நினைவே யுருவெளியாத் தோற்றுதல்போல்
பெற்ற வருளின் பெருமையால்—மற்றபொருள்
எல்லாஞ் சிவமா யிலகுமலா லச்சிவந்தான்
அல்ல வுலையனைத்து மாங்கு. (௬)

காருட மந்திரத்தாற் காருட னாவதிலை
காருட சத்தி கதித்திடுமால்—பாருடே
பண்ணுஞ் சிவோகந் பாவனைசம் பாவதிலை
நண்ணுஞ் சிவசத்தி நன்கு. (௭)

சீவ கரணஞ் சிவகரண மாய்விளங்கில்
எவ ரியற்றிடுவ ரின்னமொரு—பாவனையை
வெந்நீராய்த் தண்ணீர் விளங்கியபின் செந்தணலால்
எந்நீர்மை யுங்காணோ மே. (௮)

அறிவோ டறியாமை யான விரண்டுஞ்
செறியுமுட லொன்றேயாந் தேரில்—முறிநீள்
மரமொன்றி லீரமு மாவனலுந் தங்கி
வரவளர்த லைக்கண்ட வாறு. (௯)

அங்கையிலா னுடையொன்றை யங்களந்தே யாறுமுழங்
சங்கையற வண்டென்று சாற்றுதல்போல்—மங்களமார்

சாத்திரத்திற் சொற்றிட்ட சாதனங்க ளேதுமிலான்
சாத்தியத்தை நிச்சயித்தல் தான். (கO)

வாவியெலாந் தீர்த்த மணலெலாம் வெண்ணீறென்
றேவிளம்பும் பட்டினத்தா ரின்வாய்மைப்—பாவுணரார்
கல்லிற் சிவந்தன்னைக் கண்ணுறக் காணுமல்
நல்லசிவங் கல்லென்பர் நட்டு. (கக)

குருவை யடுத்துக் குறித்தவழி நின்றங்
கருவுருவி னுண்மையினை யாய்ந்திட்—டொருநெறியில்
நின்றவனே ஞான நிறைந்து சுகாதீதத்
தென்று மிருந்திடுவ னே. (கஉ)

உடலைக்கொண் டேயுயிரை யுற்றறிவார் போல
அடலுலகைக் கொண்டே யரனைத்—திடமாகப்
பேரறிவி லாய்ந்த பெரியோர் தமைச்சார்ந்த
பேறிவ ரானந்தப் பேறு. (கங)

சார்ந்தவண்ண மாகித் தயங்குமெனுந் தன்மையினால்
நேர்ந்தலைக்கும் பாச நிலையொழியக்—கூர்ந்தவுயிர்
வாட்டமின்றி நாளும் வதிய வடியார்கள்
கூட்டுறவில் வாழ்தல் குணம். (கச)

உடற்கு முயிர்க்கு மொருபற்றிங் கேதென்
றடைவாகப் பேச வறிவர்—நடுவழியில்
காலின்முள் தைத்திட்டால் கண்ணீர் விடுவானேன்
போலிஞா னம்பறந்து போச்சு. (கரு)

சுவரிருந்தா லன்றோநற் சூரியத்தா லோவம்
எவரேனுந் தீட்ட விசையு—மவலமெனு
ஆக்கை வெறுத்தங் கடைவேஞ் சிவமென்னல்
நாக்கின்றிப் பேசு நலம். (கசு)

உலகனைத்தும் பொய்யென் றொருகோடி காலங்
கலகலவென் றேபேசக் கற்றால்—பலனுளதோ
சுட்டறவே நின்று சுகாதீத நற்பொருளைத்
தொட்டுக்கொள் ளாதபோ து. (கஎ)

## சிவானுபூதி வெண்பா.

உருவத் திருமேனி யுண்மையினை யோரா
தருவத் தியானத்தி லார்வம்—பெருகிடுதல்
பிஞ்சிற் பழுத்தாற்போற் பெற்றிடா ராதாயம்
நெஞ்ச மழிவார் நிசம். (கஅ

சவைநடுவி லேநின்று தக்கோர்கள் மெச்சச்
சுவையொழுகச் சாத்திரங்கள் சொல்வார்—நவையொழிக்க
அவ்வழியி னில்லா ரவர்தம்மை நாடகத்திற்
செவ்விநடிப் பார்தம்மிற் சேர். (கசு

ஆகத்தை யைம்பொறியை யந்தக் கரணத்தை
ஏக வுயிரை யிறைவன்பாற்—பாகமுற
அற்பித்த லேசரியை யாதியெனத் தேராதார்
உற்பவத்தி லேசுழல்வ ருற்று. (உ0

வீட்டிலிருந் தாலென் விடுத்துக் குடும்பத்தைக்
காட்டில் வதிந்தாலென் காண்பரோ—நாட்பட்ட
உள்ளத் தழுக்கை யொழித்தமே தாவியர்பால்
தெள்ள விளங்குஞ் சிவம். (உ

என்னுடலில் மூன்று மெனதுயிரி லோரிரண்டும்
என்னுள் மறைந்தே யியற்றுமிறை—வன்செயலை
ஞானப் பிரகாச னல்கியவோர் தீக்கையினால்
நானறிந்தே னவ்வுண்மை நன்கு. (உ

உள்ளும் புறம்பு மொழியாம லெந்நாளும்
வெள்ள வெளியில் விளையாடும்—விள்ளரிய
ஆனந்தக் கூத்தை யனவரதம் பார்த்திருக்கில்
ஏனந்த கன்வருவா னீங்கு. (உ

நெருப்பென்றால் வாய்சுடுமோ நீரென்றால் சில்லென்
றிருக்குமோ வெந்நாளு மீசன்—திருப்பெயரைச்
சொன்னாலே போதுமோ தூயசிவோ கம்பாவந்
தன்னாலே யுண்டாம் தவம். (உ

ஆனந்த மேவ வவத்தையே சாதனமாய்
ஞான நிலையினிலு நண்ணுவிக்கு—மோனநெறி

வாய்மட்டிற் கொண்டாரிம் மாண்புணரா ரைம்பொறியை
மாய்வுற்ருர்க் கேவிளங்கு மால். (உ௫)

பண்டார மென்றும் பரதேசி யாமென்றும்
கண்டார்கள் சொல்லியென் கைத்தலத்தில்—பிண்டம்
இடவுண்டு பூதியினை யோராளம் பூசி
உடல்வளர்ப்ப தெந்நா ளோ. (உ௬)

நல்லார்போல் லாரென்ன நாடா துறைபவரை
எல்லாந் துறந்தவரென் றெந்நாளுஞ்—சொல்லலாம்
வாழ்த்திடினும் வைதிடினு மன்மலைபோ லேயிருந்து
தாழ்த்துவர்தம் போதத்தைத் தாம். (உ௭)

அங்குரமாய் நிற்கு மாணவத்தைத் தேசிகன்ருன்
சங்கையறச் சொற்ற சடக்கரத்தை—யங்கைசெப
மாலையிஞ லேசெபித்து மாய்க்கவே செய்திடற்கோர்
வேலையினை மேற்கொள்ளல் மேல். (உ௮)

துறவதிலே யுண்டாஞ் சுகமதனை நாளும்
பிறவியிலே மொத்துண்ணும் பேர்க—ளறிவரோ
கக்கிவிட்ட சோறதனிற் காதலினை யேவைத்து
மொக்குவர்க ளொரு முயன்று. (உ௯)

ஓமத்தீ யைப்போல வோங்கியே யெந்தெந்தச்
சாமத்தி லும்வந்து தாக்குகின்ற—காமத்தில்
போமனத்தை யீர்த்துத்தம் புத்தியினிற் கட்டுகின்ற
தூமனத்தற் குண்டு சுகம். (௩0)

பாச மொழிக்கப் பாடுபட வேண்டுமெனில்
ஈச னெழுந்தருளி யேயிருக்குந்—தேசுநிறை
நற்றளிக ளிற்சார்ந்து நாளுளுந் தொண்டுசெய்து
பற்றெழித்து வாழ்வதுவே பாங்கு. (௩௧)

நல்லகனி நாளு நறும்புட்பம் பிஞ்சுகாய்
இல்லையெனி லுண்டா யிருக்குமோ—சொல்லும்
சரியை கிரியை தனியோக மின்றித்
தெரியுமோ ஞானநிலை தேர். (௩௨)

அன்னியத்தி லேவைத்த வாசைப் பெருக்கத்தைத்
தன்னிருத யந்தன்னிற் றும்பிரப்பில்—பன்னும்
அருளுக் கிடமெங்கே யன்பு தழைத்துத்
தெருளுக் கிடமெங்கே தேர். (௫௫)

உலகமய மாயிருந்தா லோர்சிவத்தைக் காணாய்
இலகுசிவ மாயிருந்தா லென்றும்—புலனறிவில்
உண்டுபோற் காட்டு முலக மறைந்துவிடுங்
கண்டுகொள் சாதனத்தின் கண். (௫௪)

ஆங்கால மெல்லா மரனை நினையாமல்
தாங்கால முற்றுந் தமக்குழைப்பர்—சாங்காலம்
சங்கரா வென்றாலச் சாதிதான் கேட்டிடுமோ
அங்குநம னாட்கொள்வா னன்று. (௫௫)

அன்னை வயற்றி லடிக்கடிநான் வந்துதித்திங
கென்ன வுடலி லிருந்தாலு—மென்னபயம்
ஈசன் திருவரு ளென்னுளத்தி லேயிருக்கில்
வீசுமோ பாச வினை. (௫௬)

சிவனடியே சிந்திக்குஞ் செல்வத்தை வாய்ந்த
அவர்நடுவி லேநா னமர்ந்து—தவநெறிசேர்
பூதிமணி தாங்கிப் புகலிற்ச டக்கரத்தை
ஏதெனக்கு வேண்டு மினி. (௫௭)

சாத்திரங்க ளைக்கற்றுத் தக்கோர்க்குச் சொல்லார்கள்
பாத்திரத்தில் வைத்துப் பணமதனை - நேர்த்தியாய்ப்
பூமிக்குள் ளேவைக்கும் பூரியரை யொப்பாவர்
ஊமைக்கூட் டத்துதிப்ப ருற்று. (௫௮)

துன்னிருளி லேயொளியுந் தூயொளியி லேயிருளும்
மன்னி மறைகின்ற மாண்பதுபோ—லுன்னில்
அருளு மருளு மதுபோல மாறுந்
திருவருளை முன்னிட்டுத் தேர். (௫௯)

கண்ணிருந்து மென்ன கதிரிலையே லக்கதிர்தான்
விண்ணி லிருந்தும் வினயமென்—கண்ணிலையேல்

பான்மை யினிற்கலந்தாற் பண்பாகு மஃதேபோல்
ஆன்மபர மான்மாவு மாம். (௪0)

ஆனுருவில் வந்திடினு மைம்முகற்குப் பஞ்சகவ்யம்
தானுதவும் புண்ணியமுந் தானேற்கு—மானுடரைய்
வந்து பிறந்து மரஞலை யப்பணியில்
சிந்தையிலாற் கென்னகதி தேர். (௪௧)

வாரிற்செத் தார்க்கெல்லா மோடோடி யேசென்று
நேரிருந்து கண்ணி னீரைவிடு -நாரியர்போல்
அன்பர் திருமுறைக ளாய்ந்தோத வூனயிலும்
வன்பர்சேர்ந் தோதுதலென் மாண்பு. (௪௨)

தன்னை யறிந்து தலைவனையு மேயுணர்ந்தங
கன்னவனை யுள்ளத் தகப்படுத்தி— மன்னுலகைச்
செற்றவரை யேசமா திப்படுத்திப் போற்றிடுக
மற்றவரைத் தீயினிலே மாட்டு. (௪௩)

ஞானிகளை யேகண்டு நாடோறுந் தொண்டுசெய்து
மோனநிலை தேற முயலாம— ஞனிலத்தில்
காசு பறித்திடற்கே காவிவே டந்தரித்துத்
தாசிபோ லேயுழல்வார் தாம். (௪௪)

முன்னே யுருவாய் முடிந்தபின் னேயருவாய்ப்
பின்னே யொளியாய்ப் பிறங்கிநித—மென்னுளத்தில்
வன்னவன்ன மாயொளிரும் வைபவத்தை வாய்திறந்திங்
கென்னவெனச் சொல்வே னியான். (௪௫)

கலைஞானம் பற்பலவுங் கற்றபோ தெல்லாம்
அலைபோ லலைந்த வறிவை—மலையென்ன
வீறி விளங்கிடவோர் மெய்கண்ட சாத்திரத்தில்
தேறித் தெளிந்திருந் தேன். (௪௬)

இலக்கியவி லக்கணத்தை யோராளங் கற்றோரும்
இலக்காக வென்முன் னிருக்கில்—கலக்குவமென்
றெண்ணி யிருந்த விறுமாப் புடையார்கள்
மண்ணில் மறைந்தொழிந்தார் மாண்டு. (௪௭)

மூலவன லின்மீது மூச்சதனை யேதாக்கிச்
சாலமெது வாயெழுப்பிற் சந்திரன்றன்—பாலிருந்து
சொட்டுமமிர் தத்தைச் சுகித்துத் தியானத்தில்
கட்டறுதல் யோகமென்பர் காண். (௪௮)

உள்ள மொடுங்கி யொருகுறியை யேநோக்கி
மெள்ளத் தியானிக்க வேண்டுமெனில்— விள்ளுந்
தொனியேதுங் கேளாத தூய்மையே வாய்ந்த
தனியிடமே வேணடத் தகும். (௪௯

கள்ளபுரு டன்றன்னைக் காதலித்த மாதொருத்தி
உள்ளகுடும் பத்தி லுலாவுதல்போல்—தெள்ளியோர்
ஆடுவரோ டாடி யழுவாரோ டேயழுது
நாடுவர்தம் நாயகனை நன்கு. (௫௦)

மைகண்ட மாமிடற்றன் மாண்பதனைத் தாபித்த
மெய்கண்ட நாதன் விபூதியினைக்—கைகண்ட
சிற்றம் பலநாடி செல்வத் திருக்கழல்கள்
எற்றைக்கு மோங்குக வே. (௫௧)



||1ம ..  சிவமயம்.

# சற்குருவெண்பா

மன்னியவோர் நற்சிவமா ஞானப் பிரகாசன்
பொன்னடி யென்சிரசிற் பூ.

மன்னுசிவோ கம்பா வனைக்குரிய மந்திரத்தை
உன்னு முளனை யுரைத்ததற்குச்—சின்னமதாய்
எற்குக்கல் லாடையினை யீந்தடிமை யாக்கொண்டான்
சற்குருஞா னப்பிரகா சன். (க)

ஞானப் பிரகாச னற்றாளை நாளுளும்
மோனமுற வுள்ளத்தில் முன்னுவையே—னூனவுடல்
உற்றவிருள் மாற்றி யொளியுருவி லேதங்கிப்
பெற்றிடுவாய் பேரருளின் பேறு. (உ)

நல்லசிவ ஞானியெனும் ஞானப் பிரகாசன்
தொல்லியபொற் றாளைத் துதித்துவரின்—வெல்லரிய
வெய்ய வினைக்கு விடைகொடுத் தேயனுப்பி
உய்யலா ஞானவமு துண்டு. (ங)

தீன வுடலைத் தீக்கையினாற் சுத்திசெயும்
ஞானப் பிரகாச னற்சரணை—மானமிகு
நெஞ்சேநீ நித்த நிலையாக வந்தித்தால்
பஞ்சிற் பறக்கும் பவம். (ச)

அம்மா நரக மடைவோமென் றஞ்சாதே
பெம்மானம் ஞானப் பிரகாச—வெம்மான்றன்
நேத்திரத்தின் முன்னேநீ நின்றுதரி சிக்கிலெம்
மாத்திரமத் தென்றிசையே மன். (ரு)

விரகாச னத்திருந்து மீயோகஞ் செய்து
நரகாசி னைக்கடக்க ஞானப்—பிரகாசன்
ஓலக்கங் கொண்டருளு மோர்மடத்தி னைச்சார்ந்து
சீலமுறத் தொண்டினையே செய். (௬)

ஊன வுடலதனி லுற்றமரு ளைப்போக்கி
மோனவரு ளுள்ளத்தில் முற்றிடுமால்—ஞானப்
பிரகாச னற்றாளைப் பேணியெந் நாளும்
பெருகாசை யேவைத்த பேர்க்கு. (௭)

கன்மத்தைச் சேகரித்துக் காசினியி லேயழுத்தும்
வன்மமுறு தத்துவங்கள் வாடிடவே—யென்மனத்தே
நாளு நடிக்கின்ற ஞானப் பிரகாசன்
தாளுக்கிங் கொப்பேது தான். (௮)

செந்துவர்வாய் பங்கன் சிவஞான போதத்தின்
மந்திரத்தை யென்செவியில் வற்புறுத்தி—யிந்திரியக்
கானவர்கூட் டத்திற் கலவா தருள்செய்தான்
ஞானப் பிரகாச னன்கு. (௯)

ஞானப் பிரகாசன்றாள் ஞாபகத்தி லேயிருந்தால்
மோன வருட்கடலில் மூழ்கலாந்—தேனனைய
கல்வித் துறையதனைக் கண்டு சிவஞானச்
செல்வமுடன் வாழலாஞ் சேர்ந்து. (௧௦)

பொற்கயிலை நீங்கிப் புரிசடைமான் றீமறைத்து
நற்பதியாங் காஞ்சியினி னண்ணியுறை—சற்சமய
ஞாய துரந்தரனும் ஞானப் பிரகாசன்
தூயதிருத் தாளே துணை. (௧௧)



# அடிமைத் திறம்

வேத மனைத்தும் விளம்ப விளங்கும்
பூதி புனையும் புண்ணியர்க் கடியேன்
தக்கவே தாந்தம* சாற்றுந் தெய்வ
அக்க மணிபுனை யன்பருக் கடியேன்
மந்திரத் தலைமை மாண்பின் வாய்ந்த
ஐந்தெழுத் தோது மார்வலர்க் கடியேன்
பெருமறை யெனனப் பெரிது மேத்தித்
திருமுறை பயிலுந் தெள்ளியர்க் கடியேன்
ஆசை யுடனே யமைந்'யா யுயர்சிவ
பூசை புரியும் புனிதருக கடியேன்
காலந் தோறுங் கனிவிற் சென்றே
ஆலய சேவைசெ யளியருக் கடியேன்
அரனடி யாரை யரனென வெண்ணி
வரன்முறை பணிந்து மகிழ்பவர்க் கடியேன்
அறுபான் மும்மை யமல முனிவரை
மறவா தேத்தி வணங்குவார்க் கடியேன்
தனிமெய் கண்டசந் தான குரவர்
பனிமலர்த் தாளைப் பரவுவார்க் கடியேன்
தவவடி வினராய்த் தன்னறி வற்றுச்
சிவன்சீர்ச் செப்புஞ் செல்வருக கடியேன்
அருஞ்சித் தாந்த வருமை தேர்ந்து
மருளை யகற்று மகிபருக் கடியேன்
செந்தமிழ் நூல்களைச் செவ்வே கற்றுப்
பைந்தே னென்னப் பாடுவார்க் கடியேன்
கணிசிறை பூவைக் கலியாண சுந்தரன்
அணிகல ளைவதிங் கடிமைத் திறமே.

---

*சண்டு வேதாந்த மென்பது உபசரித ஐக்கிய கூறும் உபநிட தங்களை ; நிருபசரித ஐக்யங்கூறும் வியாச நூலை யன்று.

உ

வேலுமயிலுந் துணை.

# சமுநாந்திரைக.



வா. மகாதேவமுதலியார்,
சென்னை.

மீனலோசனி பிரஸ்,
தேவகோட்டை. 1912.

உ

14267

வேலுமயிலுந்துணை.

# சிறுநூற்றொகை.



இது

சென்னைமாநகரம்-

வா. மகாதேவமுதலியாரவர்களால்

இயற்றப்பெற்று,

ஸ்ரீமான். ப. அரு. அரு.

அருணாசலஞ்செட்டியாரவர்கள்

பொருளுதவியால்,

மீனலோசனி முத்திராக்ஷரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.





1912.

சிவமயம்.

காரைக்குடி-ஸ்ரீமான்.

ராமெ. சொ. சொக்கலிங்கச்செட்டியாரவர்கள்

மாணாக்கருளொருவராகிய

சிவகங்கை ஜமீன்

திருப்புத்தூரைச்சேர்ந்த தம்பிபட்டி-

சொ. வேலுச்சாமிக்கவிராயரவர்களியற்றிய

# சிறப்புப்பாயிரம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உலகமொரு குடைநிழலிற் காத்தளிக்குந்
திகிரியோற் குரிய வாகத்
தலைமையுறு மரசிருக்கை தமிழென்றுஞ்
சென்னையப்பா சாமி வள்ள
லலகிலதா வியற்றுதவப் பயனுனோன்
மெய்யுணர்த்து மடைவிற் போதித்
திலகியசொக் கலிங்ககுரு திருவருள்பெற்
றவனடிக ளிறைஞ்சி வாழ்வோன். (க)

செந்தமிழி னிலக்கியமு மிலக்கணமுஞ்
சித்தாந்தத் தெய்வ நூலுஞ்
சந்தமுறு தருக்கமுதற் பலநூலோ
டாங்கிலமுந் தகக்கற் றுய்ந்தோன்
வந்தடையு மாணவகர்க் கன்பினொடு
நூல்கள்பல வழங்குங் காலைச்
சிந்தைகொள நுண்பொருளு மெண்மைபெற
வவர்க்குணர்த்துஞ் சிறப்பின் மிக்கோன் (உ)

## சிறப்புப்பாயிரம்,

மன்னுபுகழ் மகாதேவ பண்டிதன்று
னடக்கமமை மாண்பு தோன்ற
வுன்னுசிறு நூற்றொகையாம் பெயர்தந்து
பெரும்பொருணா லுரைத்தா னம்மா
வன்னதனை யறிஞர்மகிழ் பூப்பவச்சிட்
டெதவினனு லவன்யா ரென்னிற்
கன்னல்கமு கெனுங்கழனி சூழ்தேவி
கோட்டைநகர்க் கவிஞர் செம்மல். (௨)

துறைவிரவு பெருஞ்செல்வ வைசியர்தங்
குலத்துதித்தோன் றூய ஞானப்
பிறைவிரவு முடிப்பரன்வா ழிலுப்பைநகர்க்
கோயிலினன் பேர்றால் யார்க்கு
நிறைவிரவு தன்மையொன்றே பெறுகுபே
ரனின்மேலா நிகழ்த்துஞ் செல்வ
னறைவிரவு சோலைமலி செந்தூரிற்
கந்தனடி நயக்கு மன்பன். (௩)

சேவிலூர் கொற்றவா ளீசர்திரு
நெல்லையம்மை திகழு மேன்மைக்
கோவிலூ ருறையருணு சலத்துறவு
சாமிகளின் குமரன் சேயாம்
பாவிலூர் புகழருணு சலமகிபன்
றருமைந்தன் பண்பு மேய
நாவிலூர் பலகலைதே ரருணுச
லப்பெயர்சோ ணரேந்த்ரன் மாசோ. (௪)

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# குருவணக்கம்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஈதனமீ யெனப்பணித்தற் கீகுருக்
குபதேச மியம்பி டாமற்
சாதனமீ ரிரட்டியுடைச் சாந்தகுண
சீலருக்கே சாற்று மேற்றுக்
கேதனமீ யுயர்த்தபரஞ் சுடரனைய
சொக்கலிங்கன் கேத மில்லாப்
போதனமீக் கிளரொளிய வுபயபத
மகந்தழீஇப் போற்றி வாழ்வாம்.



உ

வேலுமயிலுந் துணை.

# திருச்செந்தூர்முருகர் பதிகம்.

## காப்பு.

### வெண்பா.

பண்ணேறு செந்தமிழிற் பாடத் திருச்செந்தூர்க்
கண்ணேறு சோலைமயிற் காவலனை—யெண்ணேறு
சித்தந்தி யங்கிலன் சேவித்து நிற்கின்றேன்
மைத்தந்தி * யங்கிரிதம் மை.

## நூல்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பாராதி யாறாறுங் கடந்து நின்ற
பரனீயாண் டானைப்ப னன்பன் $ றானென்
றோராத நாளெல்லா நன்னா ளாமோ
வுதித்திடா நாளன்றே வோது கண்டாய்
நேராக நின்றுபோ ரேற்ற சூர
னீர்க்குமிழி போன்றொழிய வேலெ டுத்துத்
தீராத விடர்தீர்த்த தீர வீர
சிற்பதமே செந்தூர்வாழ் செல்வத் தேவே. (௧)

---

அங்கிரி—திருவடி.

$ தான் என்று—[illegible]

நிற்பணியாக் காயமிருந் தென்ச காய
நிற்றொழாக் கைகையென்கை சங்கை தானே
வற்பணியாப் பாடாவாய் பிலவா யன்றோ
வணங்காத சிலதலைகள் சிதலை யாமே
யெற்பணியாப் பூண்டாடு மீறி லைய
னெழிற்புயத்து மகிழ்ந்தணைக்கு மிளைய மைந்தா
சொற்பணியாக் கசடர்பாற் றோன்றாச் சோதி
ஆயதிருச் செந்தூர்வாழ் தொன்மைத் தேவே. (உ)

† அளவைநூ லுணர்ந்தக்கா லவித்தை போமோ
வரிய ‡ விய லறியினிரு வினையும் போமோ
வுளவையா னன்கறிந்தே னுன்ன டிக்கீ
ழுழுமன்பா லன்றிப்பே றெளிதி னாமோ
தளவைநேர் திருமூரற் றெய்வ யானை
தணவாம லருகிருப்பத் தணந்தே யேகிக்
களவைநேர் தரக்குறவர் கன்னி யைக்காண்
கந்தனே செந்தூர்வாழ் கருணைத் தேவே. (௩)

§ இல்லென்று ¶ முண்டில்லை யென்றும் பேசி
யேதமுறு பலசமயக் கணக்க ரென்னு
மல்லென்று மகலாத வகத்தி னார்த
மவைபுகா வரமொன்றெற் கருளல் வேண்டுங்
கல்லென்று கறங்கருவி யிழியுஞ் சாரற்
கைலைமலைக் கண்ணுதலா னிடத்தின் மேவும்

---

† அளவைநூல்—தருக்கம். ‡ இயல்—இலக்கணம்.
§ இல்—நாஸ்தி. ¶ உண்டில்லை—அஸ்திநாஸ்தி.

வில்லென்னு நுதல்வல்லி பெற்ற செல்வா
வேதியனே செந்தூர்வாழ் விமலத் தேவே. (௪)

* உடம்பானு மற்றதுகொ ளுயிர்தன் ளுனு
முறுவனவுந் தெய்வத்தா லுறுவ யாவுங்
கடம்பாநின் கழல்பரவு காத லோர்தங்
காற்றுகளே கதுவிஞேர்க் கதுவா வென்ப
நடம்பானல் விழிகளிக்க நவிலு நாத
னல்லுபதே சங்கேட்க நவின்ற சாமி
யுடம்பாடி லவுணர்தமை யொழித்த வேலா
வுத்தமனே செந்தூர்வா ழுண்மைத் தேவே. (௫)

ஓதகமே யொப்புயர்வில் சடக்க ரத்தை
யுலவாத வின்பங்கை நெல்லி யாமே
தோதகமே யிருந்தவிடந் தோன்று மற்போந்
தொல்லைவினைத் தொடக்கறுக்குஞ் சூழ்ச்சி யீதே
பாதகமே படரவுணப் பரும ரத்தைப்
பருந்திருகூ ருக்குபராற் பரனே மன்னிப்
போதகமே பொலிநாணற் பொய்கை பூத்த
புண்ணியனே செந்தூர்வாழ் புனிதத் தேவே. (௬)

புத்தியெனும் பாகுய்ப்பப் பொள்ளல் யாக்கைப்
போகுயரு மிரதத்தைப் பொறிக ளாகு

---

* ஈண்டுக் குறிக்கப்பட்டன:-ஆதிபௌதிகம், அத்தியாத்மிகம், ஆதிதெய்விகமென்னும் தாபத்திரயங்கள்.

## திருச்செந்தூர்முருகர் பதிகம்.

மத்திகையில் கலினப்பாய் மாவி ழுத்து
மலிவிடய வனம்புகுதும் வயப்ப டாதே
சத்திவடி வேலேந்திச் சங்கி ராமந்
தருசிகா வளத்துவரு சாமி நாதா
முத்திவடி வேதந்தா வளத்தின் றம்பீ
முருகனே செந்தூர்வாழ் முதன்மைத் தேவே. (க)

பாரகத்தும் விசும்பகத்தும் பரவ லான
பரங்குன்றஞ் சோலைமலை பழநிக் கண்ணு
மேரகத்துங் குன்றுதொறும் வீற்றி ருப்பா
யெந்தைநீ யன்றேவெற் கிசைத்தி கண்டாய்
வேரகத்து நுனியகத்துஞ் சுவைவெவ் வேறு
விளைகரும்பைக் கவற்றுமொழி வள்ளி மாது
வாரகத்து வைத்தகடைக் கண்ணு விண்ணோர்
வந்துபணி செந்தூர்வாழ் வாய்மைத் தேவே. (உ)

வள்ளானிற் * றேனிப்பார் மருவல் வேண்டு
மதிவேண்டு நின்கருணை நிதியும் வேண்டு
மெள்ளாமை துள்ளாமை யிகழ்பெ ருமை
யேதநோய் மேவாமை யென்றும் வேண்டு
பொள்ளாத முழுமணியே பொன்னே முத்தே
புரையில்லா வயிரமே பூவே பூவின்
விள்ளாத நன்மணமே வேதாந் தத்து
வியன்பொருளே செந்தூர்வாழ் விமலத் தேவே. (ங)

*தேனிப்பார்—தியானிப்பார். 'சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்' எனப் பெரியாரும் பணித்தார்.

[illegible]ணியாழிப் பெரும்புவியின் மன்னாய் வாழ்வார்
மகப்பெறுவார் வாழ்நாளு மிகுவார் சிந்தா
மணியாவைக் கற்பகத்தை வளபத் மத்தை
வைத்தேவல் கொள்வார்நின் னாமங் கற்பார்
குணியாகிக் குணமாகிக் குறிய தாகிக்
குறிகண்டு துணிபொருளாய்க் குலவு மொன்றே
கணியாகிப் புனத்தருகே காண நின்ற
கருத்தனே செந்தூர்வாழ் கருணைத் தேவே. (௰

முற்றிற்று.

---

உ

வேலுமயிலுந்துணை.

# பழநியாண்டவர் பதிகம்.



## காப்பு.

### வெண்பா.

யார்பூத்த தென்பழநிப் பாற்பொலியு மாண்டவனற்
சீர்பூத்த மால்புகழைச் செப்புதற்கிங்—* கார்பூத்த
தாமத்தன் றந்தவொரு தந்தியிரு தாளுளமாஞ்
சேமத்தின் வைத்தேன் றெரிந்து.

## நூல்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உலகெலாம் † பலத்தகநேர் வித்தொத் தேவன்
புறுமாயைக் குள்ளாகி யுறுதி காணு
தலகிலாக் கவலைவயத் தினதா நிற்க
வான்றோர்கண் முந்திரிகை வித்தி னீங்கே
யிலகியே மாயைதனக் கப்பா லாகி
யிணைதமக்குத் தாமேயா யிசைந்தா ரன்னோர்
விலகுறுப் பெருமையென்றே விழியுற் றுய்வேன்
வித்தகனே பழநிமலை மேவெம் மானே. (க)

---

* ஆர்—ஆத்தி. † பலம—பழம்.

இம்மையுறுந் துயரனைத்துந் தழுவிப் பற்றித்
துக்கநெறி யுறையுமென் மனதை நீக்கிச்
செம்மையுறுந் தூய்நலார்க் கிறியர் சில்லோர்
சிற்றறிவிற் றோன்றியவா சிலையி றற்றி
வெம்மையுறப் பசுநானென் றதனை யெள்ளி
மேதக்கோர் நகைபுரிய வினைவிளைத்த
பொய்மையப்ப வவருமா னுன்னை நேகொல்
லாமுமதே பழநிமலை யமரெம் மானே. (உ)

ஆம்பரிசி னின்னூல வடிவ நெஞ்சி
னழுக்கிநித்ய கருமமுமற் றதனி னேனுந்
தோம்பலவு மகலவிரி தோன்று மாற்றுற்
றாயனைமித் தியகருமம் அதுவுஞ் செய்யிற்
றும்பிலர மெனைக்காணு முலக மெய்யாத்
தயங்கவரு † மலத்தொலைத்தான் பவனி யன்றோ
காட்பிணைக்குந் தோருமையாள் களிக்குஞ் செல்வா
கண்ணியனே பழநிமலைக் கண்ணெம் மானே. (ங)

அருத்தியொடுன் பதமலரை யணுகி நாளு
மகங்குழைந்து பணிந்தெழுந்தி ரத்தஞ் சென்னி
பொருத்தியுன தேதமிலாப் புகழைப் பாடிப்
புண்ணியா புனிதாநின் றுறை பூத்தைக்
கருத்தினமைத் தொருகணமு மகலா வண்ணங்
கண்ணுமவர் ‡ விட்சேபங் கழற்று வாய்நற்
றிருத்தியமொ ரைந்துடைய கிருபா மூர்த்தி
கேகயமால் பழநிமலைக் கிளரெம் மானே. (ச)

---

† மலம்—பாவம். ‡ விட்சேபம்—மனக்கலக்கம்.

மண் § ணசை பெண்மூன்றின் மன்னு வாஞ்சை
        மாற்றியுயர் ஞானகுரு மலர்மு கம்பார்த்
தண்ணவோ நாணரென் றறைதி யென்று
        வடிவணங்கி $ யெண்குண மு மமைந்த நிற்கப்
பண்ணேறு தத்தொமசி பகரக் கேட்டப்
        பரநிலைநின் றவர்தமதஞ் ஞானம் பாற்றுங்
கண்ணவாய் நீயலையோ கற்றோ ரோத்துங்
        கத்தனே பழநிமலைக் கண்ணெம் மானே. (ரு)

மனமுளதே லுலகுளதஃ திலதே லில்லை
        மற்றதியாங் நனமென்னின் மருவு மூன்றாய்த்
தினமுளதா மவத்தைதமிற் றிகழ்சு ழூத்தி
        சேரினுல இல்லைமன மின்மை யாலே
யினமுலகே யஃதொழிந்த விரண்டி னுண்டா
        மியங்குமன முண்மையா லென்றெ னக்கே
கனமுளநீ யுணர்த்தினை யென்கைம் மாறே
        கலைமுடிவே பழநிமலைக் கண்ணெம் மானே. (சு)

---

§ ஆசை—பொன்.

$ எண்குணங்களாவன:—வேர்த்தல், கண்ணீர் ததும்பல், கம்பித்தல், மெய்நடுங்கல், வார்த்தைநழுவல், மன ம்பதறல், மேகம்போலுள்ளே குமுறி யுளமெலாம் வெதும்பல், மயிர்க்குச்செறிதல்.

ஒருமாயா ¶ விசிட்டபரப் பிரம மூலத்
தோங்குசமு சாரமயக் கிளைசத் தாதி
மருவாறு மலரறமு மறமுஞ் சார
மாறிலற முதலானக் கு மிலைகள் வேதம்
வருமோயாப் பலன்சன்ம மரணா திக்கண்
வாதையே யெனுமிவற்றை வருத்துக் காட்டித
திருமாறு வென்னிலையைத் தெளியச செய்தாய்
தெய்வதமே பழநிமலைத் திகழெம் மானே. (எ)

ஆயுதரத் துற்றிடுபோ ‖ தரந்தை யோரைந்
தணவுமிடை யுளதிநியி னத்த மீட்டல்
காயுமழி பசிபிணிவெங் காம மூப்பாற்
கரையிறுன்பம் வருமரண காலந் தன்னி
லேயுமலர் நீயறிவா யென்றே நல்லோ
ரியம்பினரித் துன்பமெலா மொழிவ தென்றே
வாயுமறை யினங்காணா தயர்ந்து தேடு
மய்யனே பழநிமலை யமரெம் மானே. (அ)

---

¶ விசிட்டம்—உடைமை.

ஐந்தரந்தை [அவஸ்தை] யாவன:—கருப்பாசயப்பையுறு த்தல், அதிற்சலம்பூரித்தல், உதிராக்கினிசுடுதல், பிரசூதவாயுமுறித்துத்தள்ளுதல், யோனித்துவாரநெருக்குண்டல்.

* இலயமே விட்சேப மேகடாய
|| மிரசாசு வாதமென விசைக்கு மூற்ற
நலமதே யில்லதொரு நான்கா () மூற்றை
நணுகாமற் காத்துயரு நிருவி கற்ப
நிலயமார் சமாதியினை மேவி நிற்ற
னின்மலமெந் நாளதனை நிகழ்த்து கண்டாய்
மலயமா முனிக்கருளு மனவாக் கெட்டா
வான்பொருளே பழநிமலை வளரெம் பரனே. (௯)

---

* இலயம்—ஆலஸ்யத்தினாலாவது நித்திரையினாலாவது விருத்தி யில்லாமலிருப்பது. விட்சேபம்—அநாத்மபதார்த்தங்களைத் துக்கவேதுக்களாக அறிந்து அத்துவிதானந்தத்தை விஷயமாக்குவதற்காக விருத்தி அந்தர்முக மாகிறது. அப்போது விருத்திக்கு விஷயமான சேதனம் அதிசூக்குமமா யிருக்கிறது. ஆகையால் கொஞ்சகாலமாவது விருத்தி அந்தர்முகமாயில்லாவிடில் சேதனஸ்வரூபானந்தத்தை யடையாமல் விருத்தி அக்கணமே பகிர்முக மாய்விடுகிறது. இந்தப் பகிர்முக விருத்தி விட்சேபம். கடாயம்—இராகாதி தோஷங்கள்.

|| இரசாசுவாதம்—யோகிக்குச் சமாதியில் விட்சேபத்தாலான துக்கநிவிர்த்தியினின்று முண்டாகு மானந்தானுபவம்.

() ஊற்றை—இடையூற்றை.

சேகமா மோகமிவை நானுமெ னது
    தூயருழக்கு மனமாய்க்கச சூழ்ச்சி சொல்லாய்
பாகமா நாட்டவரைப் புரக்க வந்த
    மல்லாருந் தினியேதாளா மாசற் றேனே
ஏகநா மொன்றுருவா ரிதயத் துள்ள
    வீசனே * யெண்குணனே யிறுதி லானே
யோகமா யின்மையா யுண்மை யாகி
    யோங்கறிவே பழநிமலே யுறையெம் மானே. (௰)

முற்றிற்று.

* எண்குணங்களாவன:—தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்ப முடைமை.

உ

வேலுமயிலுந்துணை.

# பழநி நான்மணிமாலை.

## காப்பு.

### வெண்பா.

ஏழுநிமலை யுள்ளத் திருக்கு மகிழ்ச்சி
பழநிமலை சேர்குகனுர் பற்ற—மழவிடையா
ரீன்றதும்பி யான்றெருடுக்கு மிந்நான் மணிமாலை
தேன்றதும்பி வாசமுறச் சேர்.

## நூல்.

### வெண்பா.

பாரேந்து கொள்கைப் பழவடியா ரேத்தெடுக்குஞ்
சீரேந்து நின்றதனித் தென்பழநி—சேரேம்
பிறவிக் கடல்கடக்கும் பெற்றியெமக் குண்டோ
* குறவிக் குகந்த குரு. (க)

### கலித்துறை.

உம்பற் பலமா நிரயத் தழுந்தினு முன்னையன்றிப்
புகம்பற் படாா வணக்கம் புகன்று புகலிடமொன்

---

* குறவி-குறத்தி. "குறவிதோண் மணந்த செல்வக்குமரவே டாதை" என்றார் ஆளுடையவரசும்.

றகம்பற் பமதாம் படியருள் வாயெங்க ளன்னையத்த
விகம்பற் றுருச்சீர்ப் பழநி மலேப்பன் னிருகண்ணனே. (உ)

## விருத்தம்.

கண்டங் கறுத்த காபாலி
கடுகிப் பாதஞ் சிவந்துவந்து
கண்டங் குன்னே யோமொழிக்குக்
கண்ட பொருளைக் கேட்கநீர்க்
கண்டங் கன்ன லெனவினிக்கக்
கழன்ற பழநி வாழ்வேபுன்
கண்டங் கிருளை யருளாலே
கழிக்க வல்லோ னீதானே. (௩)

## நேரிசையாசிரியப்பா.

நீதா தாதா நீதா வருளென்
றோதா நின்றே யுறுதி நாடி
முற்பல பிறப்பின் முதிர்தவம் புரிந்து
சிற்பர வியோமஞ் சேர விருந்தோ
ரிருண்முழை யுள்ளரி யேறு தாழ்வோ
ரருண்முறை யறிந்தைந் தலம்புரி பொறிப்பெயர்ச்
சிரமுடை மனமெனுந் தெய்யவா டரவ
மரமுடை யாக்கை வன்மீ கத்திடைச்
செயலற் றிருப்பச் செப்புபு மந்திர
மயலுற் றகழுஉ வலியா வேட்கையா
நச்சா றெயிற்றை நற்கெடுத் தெறிந்தோர்
மெய்ச்சார் புடையோர் மேவுதென் பழநி

மாமலை மருந்தே திருமான் மருமான்
பூமலை யாது புரக்குமா மலயம்
புக்க முனிவரன் புளகரும் பாரின்
றுக்ககண் ணீரு முருகுமுள் ளமுமா
நிற்க வப்பொரு ணிகழ்த்திய பெருமா
னற்கலை பலவு நாடும் பெம்மான்
மிகையுடை யாடவர் மிளிரு நாளிது
தகையழி மகளிர் தழைக்கு நாளிது
வல்வழக் கொன்றே வளரு நாளிது
நல்வழிக் கேகார் நலமுறு நாளிது
செற்ற மிகுந்தோர் செழிக்கு நாளிது
கற்ற வலத்தோர் கடைபடு நாளிது
பொய்மெய் யாகிப் பொற்புறு நாளிது
மெய்பொய் யாகி மேவு நாளிது
வேலியும் பயிரை மேயு நாளிது
தோலிருந் துஞ்சுளை தொலையு நாளிது

அதனால்,

மழைதரு வளனு மடங்கிய தெருவொடு
தழைதரு நிலனுந் தருவளங் கரந்தது
வறுமை மிக்கது வயக்க மற்றது
வெறுமை மேயது வெவ்வேறு கற்றே
யுடலார் வலியு முயிநார் குணனு
முடனுர் வின்றி யோகைபொன் றியதால்
வயிறோம் புதற்கே வயின்வயி னேடினேஞ்
செயிரே நீங்கச் சேர்ந்தொரு கணமு
நின்னை நினைந்து நேர்ந்திலேம் வணக்கு

முன்னைநல் வினையிலே முனைவவர்ட் கொள்வது
நின்பெருங் கடனே நிகழ்த்தினே மையா
பொன்பெறும் வறியர்ப் போன்றுற நின்னடிக்
கன்பெனு மொன்றே யருளுதி
துன்பெனு மொன்று துவரக கழிமே. (௪)

## வெண்பா.

கழித்தேன் பலவைகல் கைதவமே செய்து
விழித்தேன் கவல்கின்றேன் வேலா—செழித்தே
யகஞ்தென் பழநி யடையநா டாதே
யிகக்தென் பழவினையை யென். (௫)

## கலித்துறை.

என்பங் குருகநின் றேத்து மடியார்க் கிருமைமுத்தி
யின்பங் குலவ வளிக்கும் பழநி யிருக்குமெந்தா
யென்பங் கிருத்தி மனமாம் புலத்தை யியறிருத்தி
யன்பங் குரித்திட வாசார வித்திட் டமைவுறவே. (௬)

## விருத்தம்.

அமையாது வானுயரு மன்பே யென்கோ
வடங்காது கரைபுரளு மின்பே யென்கோ
விமையாது வாழ்கின்று ரிடுக்க ணையை
யிரவிமுன்பு பனியாக்கு மருந்தே யென்கோ
வெமையாதுஞ் செய்யும்வினைக் கீர்வா ளென்கோ
வேறென்கோ வேறென்கோ வினையி லெந்தா
யமையாரும் பழநிமலை யமர்ந்தா யின்றே
யருள்புரிவா யேத்தடியே னறியு மாறே. (௭)

## நிலைமண்டில வாசிரியப்பா.

அறிவே செறிவே யத்து விதமே
குறியே குணனே குலனே யின்றி
வயங்குவான் பொருளே மண்விண் ணிருக்கு
மயங்குவார் காணு மணியே யொளியே
துனிதரு வாழ்க்கைத் துயர நீக்கெனக்
கனிதரு கிற்பார் கனக ளாகி
யொருவே லெடுத்த வுருவே யுலவாத்
திருவே பழநித் தேவே நீயுனை
பகுதி நின்னுழைப் பருந்தடர் சுரத்திடைப்
புகுதிகண் டோர்காண் புனலென வுளாதா
லென்றறிந் தோரே யிகபரத் தாசை
பொன்ற விடுத்துப் போக்கொடு வரவு
மின்றி யலைவுறூஉ மிகலார் மனத்தினை
வென்றி கொண்டு மேதகு வீடு
பெட்டுமேற் றங்குதுறும் பெற்றி மேவித்
தட்டுமுட் டிலாது தலைப்பட் டோரே. (௯)

## வெண்பா.

தலைப்பட்டா னின்றளே தன்னை மறந்தான்
வலைப்பட்டா னின்னுமம் வாயி — னிலைப்பட்டான்
பிச்சேறி னுண்முருகா பெண்ணின் பழநியிற்கால்
வைச்சேறு மந்நாளாய் மன். (௧0)

## கலித்துறை.

மன்றிற் புரியு நடத்தா ரிடத்தார் மனைவிதருங்
...கொர் காளையை யன்னிக் கரைந்தாதே

யென்றிற் கலைக்குக் குயிற்குப் பகைமிக் கலந்தவனா
றொன்றிற் பழியிற் கொண்டுசெல் வீராயு மொன்றுதற்கே.

## விருத்தம்.

ஒன்பதுவாய்ப் புலைக்குடிலை மலமிகுபாண் டத்தை
யுறுகணிறை நோய்க்கில்லை யழுக்கினுட லத்தைப்
பின்பொருநா ளெரிகவ்வ விருப்பதனைப் பேணிப்
பெரிதூட்டிப் பனிநீர்கொண் டாட்டியுடை மாட்டிப்
பொன்படமா வயிரமணிப் பூண்களவை பூட்டிப்
பூசுவன பூசியொரு சிலர்காணத் திரியி
னென்பயனே யொன்றுமிலை நமரங்காள் வம்மி
னெய்திடலாம் பழிமலை யிருவினையுங் கெடுமே (௭௧)

## நிலைமண்டிலவாசிரியப்பா.

இருவினை யிலவே யிறைவனு மிலனே
கருவினை யடைதலுங் கால முற்றுழிப்
பிறத்தலும் வளர்தலும் பின்பொரு நாளி
னிறத்தலு மியல்பே யென்றறிந் திடுக
தீங்குசெய் யற்க தெரிந்தெவர் தமக்கு
மீங்குமற் றதனை யேனையோ ருனக்குப்
புரியினவ் வளவே பொறுமையி னுலென்
றுரிய காரண முத்திக் கியைவபோல்
வகுத்தொரு சாரார் மயக்குறக் காட்டிய
பகுத்தறி மனனே பதறி மயங்கிடல்
பாய்வரி மாவது படவே பொருத
வோய்வரி தாகி யொழுகு மதத்தி

னருவி யிழிதரு மடுகரி யந்நினை
வொருவ மாட்டா துற்ற கனவிடை
மற்றது காணூஉ மன்ற விழித்தருஞ்
செற்றவ ணின்றபூஞ் சினையுடை வேங்கையை
யலக்கும் பழநி யண்ண லுளனெனை
நிலக்கும் வீடவ னிழறரு மடியெனக்
கோடி யுய்வை குறிக்கொளு நலங்கள்
கோடி கோடி குலவிடுங் காணே. (௰உ)

## வெண்பா.

காணிற் பழநிமலைக் காவலனைக் காணாது
வீணிற் பலகண்டார் வேறுள்ள—சேணிற்
கதிபெறவே வேண்டார் கறந்தார் மலட்டா
நிதிபெறவே வேண்டார் நிலத்து. (௰௩)

## கலித்துறை.

நிலைய மருட்குநல் வித்துமுத் திக்கு நிலகுலைந்தே
யுலைய வெதுப்புமுத் தாபாக் கினியினி னுய்திபெற
வலையு முயிர்க்கோ ரிருந்தட மன்ப ரகமலர்க்கெல்
கலைய டமிர்திற்குத் தென்பழ நிக்கோன் கழலடியே. (௰௪)

## விருத்தம்.

அடிநா ளிருந்த வன்பும் பிரிந்த
வந்நா ணவின்ற மொழியும்
படிறே செறிந்த வின்பங் குலைந்து
பன்னை விருந்து பலவு

